# ஆசிரியர் குழு



## உள்ளுறை

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு

நாளிது மார்கழி மாதத்துடன் "குமரகுருபரன்" பதினைந்தாவது ஆண்டுகள் நிரம்பி, தைத்திங்கள் முதல் தேதி பதினாறாவது ஆண்டு எய்துகிறான். தங்களுடைய அன்பும் ஆதரவும் என்றென்றும் பெருகி நிற்கப் பெரிதும் விழைகின்றான்.

சந்தாப் பாக்கியுள்ளவர்கள் பாக்கியை அனுப்புவதுடன் 1965-ம் வருடச் சந்தாவையும் சேர்த்து அனுப்பிக் "குமரகுருபரன்" வளர்ச்சிக்கு மேன்மேலும் ஊக்கமளிக்க வேண்டுகின்றேன். சந்தாப் பாக்கியில்லாத நண்பர்கள் வழக்கம்போல் 1965-ம் வருடச் சந்தாவை முன் கூட்டியே அனுப்பித் தரவும் கேட்டுக் கொள்கிறேன்.

சந்தா நம்பர் குறிப்பிட்டு எழுதுவதும், முகவரி மாற்றம் உடனுக்குடன் தெரிவிப்பதும் காலதாமதத்தை அகற்றி அலுவலகத்தின் சேவையையும் துரிதப்படுத்தும். புதுச் சந்தாதார்கள் "புதிய சந்தா" என்ற விபரம் குறிப்பிட்டு எழுதுவது நலம்.

நிர்வாக ஆசிரியர்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# "குமரகுருபரன்"

## பதினைந்தாவது மலரின் பொருளடக்கம்



## Articles in English

**வெண்பா**

"குன்றஞ் சுமந்தோசிந்த கொம்பேநின் கோயிலும்பொன்
மன்றும் பணிந்தேம் வழிவந்தாற்— பொன்றுழ்
வரைசென்ற திண்டோண் மறலிக்கு நெய்தல்
முரைசன்றே வென்றி முரசு." (7)

பாவலர் இயம்பும் இயம் வாத்தியகாரர் எவர்க்கும் தெரிய வழியில்லை. நம் குமரகுருபரர் இயம்பும் இயங்களின் திறம், இப் பாடலில் மட்டும் அமைந்த வாற்ருல் அறிதற்கு இயலாது. முத்துக்குமரசுவாமி பிள்ளைத் தமிழில், சிறுபறைப் பருவத்தில் உள்ள 6,7,8ஆம் எண்ணுடைய விருத்தப் பாடல்களை நோக்கின் ஒராறு அறியலாம். கைத்திறத்தாலும் வாய் வழிவிடும் உயிர்ப்புத் திறத்தாலும் வாத்தியகாரர் இன்புறுத்துவர். பாவலர் சொற்றிறத்தாலேயே இயமெல்லாம் இயம்பவல்லர். அவர்பால் ஒலியும் இவர்பாற் சொல்லும் நின்றன. இரண்டும் ஒரிடத்து நின்றில. இவ்வெண்பாவில் ஆசிரியர், வென்றி முரசு, நெய்தல் முரசு இரண்டனையும் ஒருங்கே யியம்பினுர். 'இயம்புதல்' என்னும் சொல்லாட்சிக்குரியது இன்னேரன்ன இடம் ஆதலையும் இதைக் கற்போர் கருதற்தரியர். 'ஏழில் இயம்ப இயம்பும் வெண்சங்கு எங்கும்' என்பது உரிய இடத்தைக் காட்டும். பள்ளியாசிரியர் பார்ப்பனமாணவர்க்கு நள்ளிருட் பொழுதிலும் நன்னெறியியம்பினுர் என்பது அச் சொல்லாட்சிக்கு அஃது இடம் ஆகாமையை அறிவிக்கும். குறிஞ்சிக்கண் முருகிற்கே உரிய இயம் முருகியம். இதுபோன்ற அரிய பொருள்கள் மறைகின்றன இக்காலத்தில்.

'நெய்தல் முரைசு' என்றது 'நெய்தற்பறை'யை. அப்பெயரால் ஒருபறை (வாத்தியம்) உண்டோ? உண்டு. அதுதான் யாது? நையும் பொழுதில் அடிக்கப்படும் (சாப்)பறையே அது. அன்னதாயின், நைதற் பறை என்றே வழங்கலாகாதோ? வழங்கலாம். முன்னேர் அது தெரியாது கழிந்தனர். இக் கலி மக்கள் அவ்வாறு ஒலி மக்களாகுக. பறையை ஒலித்தற்குக் காரணம் பல உளவாகலாம். 'சாக்காட்டுப் பறை' 'சாப்பறை' என்னும் பெயர் சாதலைக் காரணமாகக் கொண்டாக்கியது.

'நெய்தற் பறை' என்னும் பெயர் இரங்கலைக் காரணமாகக் கொண்டெடுத்தது. 'நெய்தல்' என்னும் பூவின் இயற்பெயர், அது பூக்கும் திணைக்கு ஆகுபெயராயிற்று. ஆனபின், அத்திணையில் நிகழும் 'இரங்கல்' என்னும் உரிப்பொருளாகிய தொழிலுக்கு ஆயிற்று. இரங்கற்கு ஏதுவான நிகழ்ச்சியுண்டாம் பொழுதில் அடிக்கப்படும் பறை 'இரங்கற்பறை' எனப்பட்டது. அந்நிகழ்ச்சி பலவற்றுள், சாதலும் ஒன்று. அது குறித் தெழுப்பும் பறையே சாப்பறை. தொல்காப்பியப் பொருளின் ஐந்தாவது நூற்பாவுரை யிடையே 'நெய்தற் பறையாவது இரங்கற் பறையாதலின் நெய்தல் இரக்கமாம்' என்று நச்சினார்க்கினியர் உரைத்தவா றுணர்க. ('உரை' என்னுஞ் சொல்லாட்சியையும் தொன்னூலா லறிந்து கொளற்பாலது. இவ்வழி அவ்வூர்க்குச் செல்வது என் றுரைத்தார் என்பது பொருந்தாதது. 'உயர் சிவ ஞானபோதம் உரைத்தோன்' 'சிந்தை செய்திப் போதுரைத்தான் மெய்கண் டான்' என்னும் இடங்களை நோக்குக.)

ஒழுக்கத்தாலும் பூவாலும் முல்லை முதலிய நானிலப்பெயரும் உண்டாயின என்பது நச்சினார்க்கினியம். பூவைக் காரணமாக் கொண்டு கடாயினார்க்கு விடையில்லை என்றதால் அது விளங் கிற்று. 'நெய்தல்' என்ற சொல்லுக்கே இரங்கல் என்றுபொருள் என்ற நச்சினார்க்கினியர்க்கு நெய்தல் நைதல் ஆதல் உடன்பா டாகலாம். நெய்தற்பூவும் அதை அறிந்து கண்ணீர் சொரிந்து நைதற்பூவாகலாம். அவ்வாறு ஆயின், 'நெய்தல்' என்ற சொல்லுக்கும் நெய்தற் பறையடிக்கப்பட்டுவிடும்.

நெய்தற்குப் பறை மீன் கோட்பறை என்பது நச்சினார்க் கினியம். முல்லை முதலிய நான்கற்கும் முறையே (1) ஏறுகோட் பறை (2) முருகியம், தொண்டகப் பறை (3) மணமுழவு, நெல்லரிகிணை (4) மீன் கோட் பறை என்பன. பாலைத்திணைக்குச் சூறை கோட்பறையும் நிரை கோட்பறையும் கூறப்பட்டன. இவற்றுள் 'நெய்தற்பறை' என்று கூறப்பட்டிலது. சிலப்பதிகா ரத்தில், பதிகத்துரையில்; அகத்திணைப்பொருட்பகுதி முடியுமிடம் எடுத்துக்காட்டப்படும் வரிசையில் நெய்தற்றிணை கூறும் இடத் தில், "பறை கூறிற்றிலர்" என்றெழுதினர் அடியார்க்கு நல்லார்.

அதாவது சிலப்பதிகாரத்திலே இளங்கோவடிகள் நெய் தற்றிணைக்குரிய பறையைக் கூறுது விட்டார் என்றவாறு. நெய்தற்பறைக்குப் பிறப்பிடம் யாது? தொல்காப்பியம் முதலிய வற்றில் அது கூறப்பட்டிலதே! புதிதாக இப்பறையாண்டிருந்து தோன்றிற்று? இது தோன்றத்தக்க ஐயமே.

திருக்குறளில், 'அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு நல்ல படாஅ பறை' (1115) என்றதனுரையிலே, "அம் முகிழ்ப் பாரம் பொருமையின் இடைமுரியும்; முரிந்தால் அதற்குச் செத்தார்க்குரிய நெய்தற்பறையே படுவதென்பதாம். மக்கட்குரிய சாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக் குறிப்பால் நுசுப்பின் மேல் ஏற்பட்டன." என்று பரிமேலழகர் உரைத்தார். இலக்கணைக் குறிப்பு என்றது வடமொழியிலே 'லக்ஷுண' என்ற தனை. அதன் வியாகரணத்தால் அதனை அறியலாம். வேதாந்தி களுக்கு இதுவே சிறந்த சாதனம்.

இப்பரிமேலழகருரையிலே 'நெய்தற்பறை' என்று எழுதியது எங்கிருந்து கண்டு? அவர்க்குப் பழைய நூல்களிலும் உரை களிலும் உள்ள சொல், சொற்றொடர், கருத்து முதலியவற்றைத் தம் உரையிற் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ காட்டிக் கொண்டு செல்லும் பழக்கம் உண்டு. இதை உண்மைப் புலவர் யாவரும் உணவர். இக் குறளுரையிலே, புறநானூற்றுப் பாடல் (194) நினைவிலிருந்தது. அங்கிருந்து கண்டு அதை எழுதினர்.

"ஓர்இல் நெய்தல் கறங்க, ஓர்இல்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்,
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்
இன்னது அம்மஇவ் வுலகம்
இனிய காண்க இதன் இயல்புணர்ந்தோரே."

இது பொதுவியற்றிணைப் பெருங்காஞ்சித்துறைப்பாட்டு., பக் குடுக்கை நன்கணியார் பாடியது. இதனுரையிலே 'சாக்காட்டுப் பறை' என்றுரைத்தார் பழைய வுரையாசிரியர். பரிமேலழகர்

எழுதியது, 'செத்தாற்குரிய நெய்தற்பறை' என்பது. இதனாலும் பரிமேலழகருரையின் உண்மை நிலை சிறிதுணரப்படும். அவரை இக் காலத்தில் தமிழாசிரியரும் அலட்சியமாகப் பேசுவது பாவப் படுகுழி வீழ்வை ஏதுவாகக் கொண்டிருக்கின்றது.

தில்லைச் சிவகாமியம்மை யிரட்டைமணிமாலைச் செய்யுளை நோக்குவோம். பிறரை வெற்றி கொண்ட முரசே எமனுடைய முரசு. எமன் எதுவரையில் எல்லாரையும் மாய்க்கும்? தான் மாயும் வரையில். தானே மாயுங் காலம் வந்திட்டதே! இனி அம் முரசு வெற்றிமுரசு ஆமோ? நெய்தல் முரசாகத்தானே மாறி யாக வேண்டும்! அவன் ஏன் சாகின்முன்? எமனுக்கும் சாவுண்டோ! எமனுக்கும் எமனுண்டோ! இதில் என்ன வியப்பு?

காலனுக்கும் முடிவு காலத்தைச் செய்பவன் காலகாலன். காலகாலனது சக்தியை வழிபட்டால் காலன் அணுகவல்லானோ? 'வழிவருதல்' என்பது ஒருவர் பின் செல்லுதல். கொல்லப்படுவார் பின் கொல்வானாகிய எமன் செல்வான். அவன் கொல்லுவான் செல்லுவான்.

முதலில், 'குன்றம் சுமந்தோசிந்த கொம்பே' என்று அம்மையை அழைத்து, நின் கோயிலையும் பொன்மன்றத்தையும் பணிந்தேம் என்று தம் வழிபாட்டைப் பின் அறிவித்து, அத்த கைய எங்கள் வழிவந்தால், எமன் இறந்தே போவான் அன்றி உயிரோடிரான். நின் அருள் அவனை எம்வழி வர வொட்டாது கொன்றே விடும் என்றார் சிவகாமவல்லியின் திருவடிப் பத்தர்.

இதனால், யாவரும் உணரத்தக்கது:- திருவருளாற்றலை வழிபட்டால் ஞானம் பெறலாம். ஞானம் கிடைக்கப் பெற்றால் வீடு எளிது. ஞானமே பிறப்பிறப்பை அழிக்கவல்லது. 'ஞானத் தால் வீடென்றே நான்மறைகள் புராணம் நல்ல ஆகமம் சொல்ல அல்லவாம் என்னும் ஊனத்தார் என்கடவர்?'' என்பது சிவஞான சித்தியார்.

---

(தொடரும்)

இதற்கு விளக்கம் கூறப்புகுந்த கல்லாடனார் கானற்சோலை யின் மலர் மணச் சிறப்புக் கூறுமுகத்தான், வழுதியாகி முழு துலகளித்த ஆலவாய் அண்ணலின் அருட்புகழையும், அப்பெரு மான் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள கூடல்மாநகரை வல மாக வருகின்ற, வழுதியரின் பொய்யாக் குலக்கொடியாகிய வையையின் மாண்பினையும் இனி தெடுத்தியம்பும் எழில், தனித் தன்மை வாய்ந்தது.

வையையின் மாண்பு:

எல்லா வகையாலும் நிறைந்து விளங்கும் கல்வி மாட்சி யுடையவர் இயற்றும் இலக்கியம் என்றும் வாழும். எக்காலத் துக்கும் பொருத்தமான கருத்துக்களை நடுநாயகமாகக் கொண்டு இலங்கும்; கற்பார் உள்ளம் களி கொள்ளும் கவின் நிறைந்த கவிகளால் இயன்று, பூ, மணி, யானை, பொன் முதலிய மங்கல மொழிகளால் தொடங்கப் பெற்றிருக்கும். திங்கள், மழை, கதிர வன் ஆகியவற்றின் தோற்றம் பற்றிய வருணனைகளைக் கொண்டு, யாண்டும் பரவிப், பயில்வார்க்குக் குற்றமற்ற நற் காட்சியை நல்கும். பயில்வார்க்கும், பயின்றார் எடுத்துரைக்கக் கேட்பார்க்கும் மாறாத இன்பமும் தந்து மகிழ்விக்கும். இத் தன்மையுடைய சான்றோர் கவி, வையை யாற்றின் தோற்றம் செலவு, பயன் ஆகியவற்றிற்கு மிகச் சிறந்த உவமையாகத் திகழ்கின்றது. உயர்வற உயர்ந்த தனது கொடுமுடிகளில் திங் களும் முகிலும் கதிரவனும் தவழும்படியான பெருமையுடையது மலை. அத்தகைய மலையில் தோன்றுகிறது வையை. பூவும், மணியும், யானையும் பொன்னும் போன்ற பல வகைப் பொருள் களையும் வாரிக் கொண்டு வருகின்றது. நானிலங்களிலும் பரவி யோடுகின்றது. காலும், குளமும், வயலும், பண்ணையும் என்று எங்கும் பரவி யாவர்க்கும் நிறைந்த விளைவை நெடிது கொடுத்து இன்புறுத்துகின்றது. இங்ஙனம் வையை யாற்றின் சிறப்பைச் சான்றோர்கவிக்குச் சிலேடை வகையால் இணைத்து உவமித்துக் கூறிக் கல்லாடனார் போற்றும் திறம், கல்வியிற் பெரியராகிய கம்பர் கோதாவரியாற்றைச் சான்றோர் கவியென இராம இலக்கு வர் கண்டதாகக் கூறும் "புவியினுக் கணியாய்......." என்று தொடங்கும் பாடலோடு ஒப்பிட்டு மகிழ்தற்குரியது.

முழுதுல களித்த வழுதி:

இங்ஙனம் வற்றுத் வளம் பல பெருக்கும், குறையாத நீர்ச் செழிப்புடைய வையை வலமாகச் சூழத் தமிழ் வளர்த்த பாண்டிய மன்னரின் தலைநகர்மாகிய கூடல்மாநகர் திகழ்கின்றது. அங்கு உலகனைத்திலும் வாழும் உயிர்களுக்கெல்லாம் உயிர்க்குயிராக விளங்கும் ஒப்பற்ற இறைவன் எழுந்தருளி இருக்கின்றான். அவன் விண்ணோர்களுக்கும் முனிவர்களுக்கும் அறிய வாராத அருமையுடையவனாயினும், அன்பர்க்கு எளிவரும் கருணையாளனாதலின், தடாதகைப் பிராட்டியாரை மணந்து அருள் செய்த போது, திருமணத்தில் கூடிய ஏனைய வேந்தர்க்கு அரசோச்சும் முறைமையினைத் தெரியக் காட்டத் திருவுளங்கொண்டான். அவ்வளவில் கொன்றைமாலை வேப்பமாலையாயிற்று; விடைக் கொடி மீனக்கொடியாயிற்று; பாம்புகளெல்லாம் அழகிய பொன்னால் செய்த அணிகலன்கள் ஆயின; சடை மறைந்தது; மணி முடி விளங்கியது. "உள்ளொடு புறங்கீழ் மேலாய் உயிர் தொறும் ஒளித்து நின்ற கள்வன்" ஆகிய எம்பெருமான் வழுதியர் கோனாகி அரசு வீற்றிருந்தான். அவன் அரசு வீற்றிருந்த மாட்சியை

அதிர்விடைக் கொடியங் கயற்கொடி ஆக
அராக்கலன் பொற்கலன் ஆகப்
பொதியவிழ் கடுக்கை வேம்பல ராகப்
புலியதள் பொலந்துகி லாக
மதிமுடி வைர மணிமுடி யாக
மறைகிடந் தலம்புமா மதுரைப்
பதியுறை சோம சுந்தரக் கடவுள்
பாண்டிய னாகிவீற் றிருந்தான்

என்னும் திருவிளையாடற் புராணச் செய்யுளோடு இப்பொருள் அமைந்த கல்லாடப் பாடற்பகுதியை ஒப்பிட்டும் அறியலாம். அவன் அருள் யாண்டும் நீக்கமற நிறைந்து விளங்குவது போலக் கானற்சோலையின் தாழை மணம் எங்கும் பரந்திருந்தது.

தோழியின் பேச்சு:

மணம் நிறைந்த அக்கானற் சோலையில் ஒருபால் மறை விடத்தில் தலைவியைக் காணும் எண்ணத்துடன் தலைவன் நிற்கிறான். அவனைக் கண்ட தோழி, காணாதவள் போலத் தலைவியுடன் பேசுகிறாள். ஆனால் அவள் பேச்சுத் தலைவன் காதில் நன்கு விழுகின்றது. "பாதி நிலாப்போன்ற அழகிய நெற்றியையுடைய பொற்கொடி போலும் என் தோழியே! நம் அன்னையின் செயலை அறிவாயோ? நம்மைச் சிறந்த ஒழுக்க நெறியில் நிறுத்துவதில் சிறிதும் பின்னிடாதவள் அல்லவா அவள்! அவளுடைய பார்வை இன்று என்னவோ போல் உள்ளது. என்றும் நம்மீது மாறாத அன்புடையவள். அவளுடைய மனமோ செம்மைக்கு இருப்பிடம். நாமோ அவள் கண்மணி போன்றவர். நம்மை அவள் தன் இமையுள் வைத்துப் பொதிவது போலப் பாதுகாப்பவள். அத்தகைய இயல்புடையாள் இன்று திருட்டுக் குற்றம் செய்தவரைப் பார்க்கும் கடுகடுப்போடு என்னைப் பார்த்தாள். அவள் செம்மையான மனம் மாறிப்போய் விட்டது என்பதை அவள் பார்வை காட்டுகிறது. மனத்தில் உள்ளதை வெளிப்படையாகச் சொல்லவும் இல்லை. உள்ளே வைத்துக் கொண்டே கொதிப்படைந்திருக்கிறாள். காரணம் தெரியுமோ? நள்ளிரவில், நொச்சிப் பூக்கள் உதிர்கிற வேளையில், தலைவரது உயர்ந்ததேர் கானற் சோலைக்கு வந்து சென்ற அடையாளங்களை அவள் கண்டிருக்கிறாள். இதனால் என்னென்ன விளையுமோ? அறியேன்! அன்னையின் சினங்கொண்ட முகத்தை நோக்குவதற்கே அச்சமாக இருக்கிறது. என் செய்வது?" இதனைக் கேட்ட அவன் சிந்தனையில் ஆழ்கின்றான்.

கல்லாடர் உணர்த்துவது:

இக்கருத்தினைப் பொதிந்துள்ள கல்லாடனார் பாடல் "தாயறிவு கூறல்" என்ற துறைக்குரிய திருக்கோவையார்ச் செய்யுளுக்கு அருமையானதோர் விளக்கம் ஆகும்: திருக்கோவையார்ச் செய்யுளில் இறைவன் திருவடிகள் "வெறியார் கழல்" எனச் சிறப்பிக்கப் பெற்றிருக்கின்றன. அன்பர்க்கு எளிவரும் அவன் திருவடிகளின் சிறப்பை, அவன் அருள் மணத்தை,

எண்திசையும் புகழ்மணம் பரப்பி யிலங்கும் அவன் திருவருட் பெருமையை, வழுதியாகி முழுதுலகளித்த வரலாற்றினைக் கூறிவிளக்குவது உள்ளத்தை நெகிழ்க்கிறது, நானிலம் புரக்கும் வேந்தர்க்கு, அரசாளும் முறைமையைத் தானே நல்லரசோச்சிக் காட்டியருளினன் என்னும் கருத்து, இன்றைய அரசியலாரும் தக்க முறையில் மேற்கொண்டாழுகுதற்குரியதாகும். நாட்டின் செழிப்புக்கும் மேன்மைக்கும் தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்விலாச் செல்வரும் இன்றியமையாத தேவை என்பதை வையை யாற்றினைச் சான்றோர் கவிக்குச் சிலேடை வகையால் உவமித்து விளக்குவதிலிருந்து உய்த்துணர்ந்து கொள்ளலாம். இப்பாடலின் முற்பகுதி ஒரு நாட்டுக்குத் தேவையான வளத்தினையும், அதனைப் பெருக்கவல்ல கருணையுடையார் ஆளும் ஆட்சி முறையையும் இனிது எடுத்து விளக்குவதை எண்ணி மகிழலாம்.

பாடலின் பிற்பகுதியில் தாய்மனத்தின் இயல்பும் மக்களது நல்வாழ்வில் அத் தாய் மேற்கொள்ளும் அக்கறையும், குடிப் பெருமையைக் காப்பதற்கு அவள் எடுக்கும் உறுதியான முயற்சியும், பிழைகண்டவிடத்துக் கண்ணோடாது, கண்ணு லாயே இடித்துணர்த்தும் இயல்பும், வெளிப்படக் கூருது முகக் குறிப்பினிலேயே மக்கள் உணர்ந்து திருந்திக் கொள்ளும் வகையில் நடந்து கொள்வதும், வியந்து போற்றிப் பின்பற்றற் பாலன. தோழி, தாயின் செம்மையான மனமும் திரிந்து வெகுளுமாறு கொள்கையில் பின்னிடாத தலைவன் நடந்து கொண்டானே என்று தலைவியிடம் வருந்திக் கூறுவதோடு, இனி என்னென்ன இடுக்கண்கள் நேருமோ, என்று அஞ்சியும் பேசுவதால், அவன் வரைவு முயற்சியில் நாட்டங் கொள்ளுமாறு தூண்டுவதும் புலனாகும். இங்ஙனம் தோழி தன் அறிவு மாட்சியாலும் திறம்பட எடுத்து மொழிவதாலும் தலைவன் தலைவியரைச் செந்நெறிச் செலுத்தும் பெருங்கடமையைச் செய்து பேணுகிருள் என்பதும் புலப்படும். இன்னோரன்ன நலங்களை யெல்லாம் கல்லாட நூலின் இரண்டாவது பாடலில் கண்டு மகிழ்க.

.... .... .... .... .... ....
.... .... .... .... .... ....
தன்கண் போலும் என்கண் நோக்கிக்
கள்வரைக் காணும் உள்ளம் போலச்
செம்மனம் திருகி உள்ளம் துடித்துப்
புறன்வழங்காது நெஞ்சொடு கொதித்தனள்
மாறுக கற்பின் அன்னை
கூறும் மதியத் திருநுதற் கொடியே.

---

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 15. இதழ் 11-ன் தொடர்ச்சி

## The Sub-divisions in in Yoga

### யோகத்து உட்பிரிவுகள்

47. யோகிக்கு யோகாதி மூன்றுள; கொண்டுற்றோர்
ஆகத்தகு கிரியாதி சரியையாந்
தாகத்தை விட்ட சரியை யொன்றும், ஒன்றுள்
ளாதித்தன் பத்தியுள் அன்பு வைத்தேனே

The yogi has sub-divisions three in his path;
The yoga-kriya that helps him be the yogi;
The yoga-sariya that is bereft of the sariya emotions
And the yoga-inyoga where-in thought centres on
the Sun within;
This latter I fixed my heart on.

யோகிக்கு யோகத்துள்ளேயே மூன்று நிலைகளுள்ளன. ஒன்று, யோக நெறிக்குத் தன்னைத் தகுதியாக்கும் யோகத்தில் கிரியை; மற்றொன்று வெளிப்படையான உணர்ச்சியைக் கடந்த யோகத்தில் சரியை; மூன்றுவது, உள்ளே இருக்கும் ஆதித்தனைக் காணவல்ல யோகத்தில் யோகம். இவற்றுள் பின்னதை நான் பெரிதும் விரும்பினேன்.

குறிப்பு: ஆதித்த நிலை பற்றியும், அண்டாதித்தன், பிண்டாதித்தன், மனவாதித்தன், ஞானுதித்தன், சிவாதித்தன் பற்றிய விவரங்களும் ஏழாந்தந்திரத்தில் விரிக்கக் காண்க

## Stages of Initiation in the Yoga Path

### யோக நெறியில் நால்வகைத் தீட்சை

48. யோகச் சமயமே யோகம் பல வுன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோக நிர்வாணமே உற்ற பரோதயம்
யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே.

Samaya Diksha in yoga is the initiation for diverse yoga efforts;
Visesha Diksha in yoga is the baptismal rite for achievment of eight-fold yoga;
Nirvana Diksha in yoga aids the yogin glimpse the Divine;
And when he is granted the Abhisheka Suddhi, then is he ripe for the Siddha State,

யோக நெறியுள்ளும் நால்வகைத் தீட்சைகளுள்ளன. யோக சமயதீட்சை பலவான யோகப்பயிற்சிக்கு முன்துணையாக அமைவது; யோக விசேட தீட்சை அட்டாங்க யோகம் பயில்வதற்குச் சாதகனைத்தயாரிப்பது; யோகநிர்வாண தீட்சையோகக் காட்சியில் இறைவனைக் காணத் துணைசெய்வது; அரிய அட்டமா சித்திகளைப் பெற்று சிவஞானியாக்க வலிமை யுடையது யோக அபிடேக தீட்சையாகும்.

குறிப்பு: சித்தியுறுதல்–சிவஞானம் பெறுதல். முன்னே 28-ம். பாட்டில், "சித்தர் சிவஞானம் சென்று எய்து வோர்களே" என்றாராக.

### ஞானம்

## Gnana

49. ஞானத்தின் மிக்க[1] அறநெறி நாட்டில்லை;
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று;

ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா;
ஞானத்தின் மிக்கார்[2] நரரின் மிக்காரே.

Than Gnana,
There is none better an ethical path, here below
None better a religious faith;
Nothing else than Gnana can confer the Salvation
true;
They that are exalted in Gnana
Are truly exalted among men.

ஞானத்தினும் பெரிய அறவழி இவ்வுலகத்தில்லை; அதனினும் பெரிய சமய நெறியுமில்லை; அதுவன்றி வேறெந்த மார்க்கமும் முத்தியில் உய்க்காது. ஞானத்திற் சிறந்தவர்களே மக்களிற் சிறந்தோர்.

பாடம் 1. தவநெறி
2. நகரின்.

நாதாந்தம் கண்டவன் ஞானி

## The Gnani transcends the Nadanta

50. சத்தமும், சத்த மனனும், தகுமனம்
உய்த்த உணர்வும், உணர்த்தும் அகந்தையும்
சித்தம்-என்றிம் மூன்றும் சிந்திக்கும் செய்கையும்
சத்தம் கடந்தவர் பெற்ற சன்மார்க்கமே.

Out of the primal principle Sound
The Mind springeth;
And out of the Mind – Consciousness, Egoity and
Willing;
They who have mastered these three
And the Mind's cogitational activity as well,
Verily have they mastered the principle of Nada
And have truly attained the Gnana.

நாத தத்துவத்திலிருந்து மனம் தோன்றுகிறது; மனத்திலிருந்து புத்தி, அகங்காரம், சித்தம் என்ற மூன்று அந்தக் கரணங்கள் பிறக்கின்றன. இந்நான்கையும் வெல்கின்றவர் நாதாந்த நிலையை அடைகின்றனர். அவரே ஞானியாவார்.

## முத்திப்படிகள்

## The Stages of Attainment

51. தன்பால் உலகும் தனக்கருகாவதும்,
அன்பால்; எனக்கருளாவதும் ஆவன
என்பார்கள்; ஞானமும் எய்தும்; சிவோகமும்
பின்பாலின் நேயமும் பெற்றிடுந் தானே.

Thus they say:
By devotion the Soul first sojourneth the Lord's world;
And then cometh to dwell in Lord's proximity;
And further on receiveth the Lord's grace,
And in the end attaineth Gnana
There after,
In one Subject-Object identification–the I with Thou
He Shall himself Siva becometh.

பக்தி நெறியிலே நிற்போர் முதலில் சாலோக பதவிபெறுகிறார்கள்; பின்னே சாமீபம் வந்தெய்துகிறது; அதன் பின்னர் இறைவன் அருளைப்பெற, ஞானத்தைப் பெறுகிறார்கள், இறுதியில், சிவமும் தானும் இரண்டற்றதாகிய ஞேயஞாதுரு ஒன்றிப்பைப் பெறுவர்.

வரி. 4, நேயம்-ஞேயம்.

(தொடரும்)

---

# திருவருட்பயன் — தெளிவுரை

பண்டித வித்துவான், சைவப் புலவர், சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்,

---

(மலர் 15. இதழ் 11-ன் தொடர்ச்சி)

## 10. அணைந்தோர் தன்மை

அஃதாவது இறைவனது திருவருளில் அழுந்தி நிற்போரது தன்மை எனப் பொருள்படும். மேல் ஞானியர்களும் வாசனாமலம் தாக்காதவாறு திருவைந்தெழுத்தினை ஓதித் திருவருளில் அழுந்திநிற்குமாறு கூறினார். இதனுள் அவரது இயல்பினை விவரிக்கின்றார் ஆதலின் மேலையதனோடு இயைபுடைத்தாயிற்று.

91. ஓங்(கு)உணர்வின் உள்ளொடுங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவார்மற்(று) ஏதுண்டு சொல்.

(தெ-ரை) இறைவனது ஞானத்தின் கண்ணே தமது அறிவு இச்சை செயல்கள் அடங்கப் பெற்றுத் தமது அறிவினுள்ளே பேரின்பம் அடங்கும்படி நிட்டையில் அழுந்தி நிற்பர் ஞானியர்கள். அவர்களுக்கு வேறு பேறு என்ன உளது? ஒன்றுமில்லை, என்பதாம்.

தூங்குதல் - வேறுசொற் செயல்களின்றி அதுவேயாய் அசைவின்றி இருத்தல். மற்றேதுண்டு சொல் என்ற தொடருக்கு 'இத்தகைய ஞானியர்க்குச் சொல்லென்பது யாதுளது? ஒன்றுமில்லை' (மௌனமே அவர்க்கு இலக்கணம்) எனப் பொருள் உரைப்பாரும் [1]உளர்.

---

1. கா. சு. பிள்ளை; தே. ஆ. சீனிவாசன்.

92. ஐந்தொழிலும் காரணர்கள் ஆம்தொழிலும் போகம்நுகர்
வெம்தொழிலும் மேவார் மிக.

(தெ–ரை) இறைவனல் செய்யப்படும் ஐந்து தொழில்களை யேனும், திருவருளால் அதிட்டிக்கப்பட்டுச் செய்யும் தொழில் களை யேனும், உலகியற் பொருள்களை நுகர்தற்கானவர்தம் கொடுந் தொழில்களை யேனும், அந்த ஞானியர்கள் செய்யார்கள் என்பதாம்.

ஞானியர் சிவத்தோடு கலந்து பேரின்பத்தைத் துய்ப்ப தன்றிப் பிறதொழில்கள் எவற்றையும் செய்யார்கள் என்பது இதன் கருத்து ஆகும். இதனையே,

"உம்பர்பிரான் உற்பத்தி யாதிகளுக் குரியன்
உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே"

என்னும் சித்தியார்ப் பகுதியும் விளக்கி நிற்கும்.

'காரணங்கள் ஆம் தொழிலும்' எனப்பாடங் கொள்வர் தே. ஆ. சினிவாசன் அவர்கள்.

33. எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர்ஒன்(று)
அல்லாது அறியார் அற.

(தெ–ரை) எல்லாவற்றையும் அறியும் அறிவு தமக்கு இருப் பினும் ஞானியர்கள் இறையின்பத்தில் அழுந்தி நிற்றலன்றி வேருென்றும் செய்தலறியார் என்பதாம்.

"பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்"

என வரும் சித்தியார்ப் பகுதியும் இதனை நன்கு விளக்குதல் காண்க.

94. புலனடக்கித் தம்முதற்கண் புக்குறுவர் போதார்
தலம்நடக்கும் ஆமை தக.

(தெ-ரை) நிலத்தில் செல்லும் ஆமை இடர்வந்துழித் தனது ஐந்துறுப்புக்களையும் அடக்குதல் போல ஞானியர்களும், தமக்கு

இடர்புகுதாவாறு ஐம்பொறிகளையும் காத்துத் தமது முதற் பொருளாகிய இறைவனது பேரின்பத்தில் அடங்கியிருப்பர்; வேறு பிற செய்திகளில் தலையிடார் என்பதாம்.

'உரனென்னும் தோட்டியால்'; 'ஒருமையுள் ஆமை போல' என்ற திருக்குறள்கள் ஈண்டு நினைவு கூர்தற்குரியன.

95. அவனையகன்(று) எங்கின்றும் ஆங்கவனும் எங்கும்
இவனையொழிந்து உண்டாதல் இல்.

(தெ–ரை) இறைவனை யகன்று எவ்வுலகமும் இல்லை; அது போல அவ்விறைவனும் தன்மை யடைந்த இந்த ஞானியரை யொழிந்தும் எவ்வுலகமும் இல்லை என்பதாம்.

இறைவனைப் போன்றே ஞானியரும் வியாபகமாய் நிற்பர் என்பதாம். "இகலோகத்தே முத்திபெறும் இவன்தான்...... கண்ணுதல்தன் நிறைவதனில் கலந்து காயம் கழிந்தக்கால் எங்குமாய்க் கருது அரன்போல் நிற்பன்" என்னும் சித்தியார் பகுதியும்; தானே திசையொடு தேவருமாய் நிற்கும்'' என்ற திருமந்திரப் பகுதியும் ஈண்டு ஒப்பிட்டு உணர்தற்குரியன.

(தொடரும்)

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# அறிவிப்பு

## ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவு காசியாத்திரை நிதி ரூ. 5000/-

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் ரூ. 5000/- (ரூபாய் ஐயாயிரம்) மூலதனம் வழங்கப்பெற்று ஸ்ரீவைகுண்டம் மாணவ-மாணவிகள் காசியாத்திரை நிதி நிறுவப்பெற்று, அதற்குரிய சாசனமும் 23-2-1949-ல் ஸ்ரீவைகுண்டம் ஆவணப்பதிவு அலுவலகத்தில் பதிவு செய்யப்பெற்றுமுள்ளது.

ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற தேவாரத் திருமுறைப் போட்டியில் முதன்மையாகப் பரிசு பெறும் மாணவனோ, மாணவியோ, அவர்களின் பெற்றோரோ, பாது காவலரோ (Guardian) காசியாத்திரை செய்ய, யாத்திரைச் செலவு வகைக்கு ரூ. 135/- (ரூபாய் நூற்று முப்பத்தைந்து) இனமாக டி மூலதன வட்டி வருமானத்திலிருந்து, ஒவ்வொரு ஆண்டும் அளிக்கப் பெறும்.

தேவாரத்திருமுறைப் பரிசு கிடைத்த ஒரு மாதத்திற்குள்ளாகப் பரிசு பெற்றுள்ள மாணவன் அல்லது மாணவி, தன்னுடைய பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் மூலம் ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் மடாலயத்தின் தருமகர்த்தருக்கு மனுச் செய்து கொள்ள வேண்டும். காசியாத்திரை செல்பவருக்கு ரூ. 135/- அளிக்கப்பெறும். காசிசென்று திரும்பும் பொழுது எடுத்துக்கொண்டு வரக்கூடிய அளவு கங்கைத் தண்ணீர் கொண்டுவந்து ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அபிடேகத்திற்கு டி மடாலயம் தருமகருத்தரிடம் சேர்ப்பிக்க வேண்டும்.

பரிசுத் தொகை கிடைத்த 15 தினங்களுக்குள், காசியாத்திரை தொடங்க வேண்டும். புறப்படுவதற்கு இன்னும் கொஞ்ச காலம் வேண்டுமென்று யாத்திரை செல்பவர் எழுதிக் கேட்டுக் கொண்டால் தருமகர்த்தருக்கு அனுமதிக்க உரிமையுண்டு.

ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் மடம்,
ஸ்ரீவைகுண்டம்.
1-12-64

டி. எம். குமரகுருபரன்,
மானேஜிங் டிரஸ்டி.

---

குறிப்பு:- இவ்வருடத் தேவாரத் திருமுறைப் போட்டியில் முதற்பரிசு இரண்டாம் பரிசு பெற்ற இரண்டுபேர்களும் காசியாத்திரை செல்ல 1964-65-ல் அனுமதிக்கப் பெறுவர்; 31-12-64 வரை விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பெறும்.

# திருக்கருப்பறியலூர்

தேவாரமணி, திரு. சட்டையப்பன் அவர்கள்.
திருப்பனந்தாள்.



கோயில் என வழங்கும் தில்லைத்தலம்; இத்தல முதலாக ஈங்கோய்மலை எனும் தலம் ஈருக, சோழநாட்டில் காவிரியின் வடகரைத் தலங்கள் அறுபத்துமூன்று. இத்தல வரிசையிலே இருபத்து ஏழாவது தலமாக விளங்குவது 'திருக்கருப்பறியலூர்' என்னும் திருத்தலம். மேலைக்காழி என வழங்கும் இத்தலம். ஆயினும் 'தலைஞாயிறு' என்றே இன்று வழங்கி வருகின்றது. வைத்தீஸ்வரன் கோயில் என்னும் புகைவண்டி நிலையத்திலிருந்து திருப்புன்கூர் வழியே ஐந்தாவது கல்லிலேயுள்ளது இத்தலம். ஆலயத்தின் பெயர் 'கொகுடிக் கோயில்' என்பதாகும். ஞான சம்பந்தப் பெருமானது இந்தளப் பண்ணையும், சுந்தரமூர்த்தி களின் நட்டராகப் பண்ணையும் பெற்றுள்ளது இத்தலம்.

" சுற்றமொடு பற்றவை துயக்கற அறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடும் அடியார்கள்
மற்றவரை வானவர்தம் வானுலகம் ஏற்றக்
கற்றவன் இருப்பது கருப்பறியலூரே" (ஞானசம்பந்தர்)

" முட்டாமே நாள்தோறும் நீர்மூழ்கிப்
பூப்பறித்து மூன்று போதும்
கட்டார்ந்த இண்டை கொண்டடிச் சேர்த்தும்
அந்தணர்தங் கருப்பறிய லூர்க்
கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானைக்
குழகனைக் 'கொகுடிக் கோயில்'
எட்டான மூர்த்தியை நினைந்தபோ
தவர் நமக்கு இனியவாறே." (சுந்தரர்)

கருப்பறியலூரில் வாழ்ந்த அந்தணர்கள் இறைவனை எப்படி மறவாத மனமுடையராய் வழி பட்டார்கள் என்பதைப் படம் பிடித்துக் காட்டும் சுந்தரர், அத்தலத்தில் இறைவன் உறைகின்ற கோயிலையும் குறிப்பிட்டுவைக்கின்றார்; அதுதான் 'கொகுடிக்கோயில்' என்பது. கோயில் திருச்சுற்றில் கொகுடிமுல்லை இருப்பது இதன் சிறப்பைக் காட்டும்.

'கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம்
இடர்தீர்க்குங் கருப்பறிய லூர்'

என்பது சுந்தரரின் சொல்லாட்சி! இதிலிருந்து அறியாதார் அல்லலைக்காட்டிலும், எல்லாம் அறிந்தாரின் அல்லல் ஒரு எல்லைக்குள் அடங்காதென்பதை யுணரமுடிகின்றது. எல்லாம் உணராதவர் செய்யும் தவற்றைவிட எல்லாம் தெரிந்தவர்செய்யும் தவறு அதிக விலையைப் பெறும். அவர்களுக்கு ஏற்படும் இடர் இலேசில் தீராது. அப்படியுள்ளோர் இடர் தீர்க்கும் தலம் கருப்பறியலூர்.

'குற்றம் பொறுத்த நாதேச்சுரர்' – இது இறைவன் திருநாமம்.
'கோல்வளைநாயகி' – இது அம்மையின் திருநாமம்.

சரி, குற்றம் பொறுத்த இந்த நாதர், என்ன குற்றத்தைப் பொறுத்தார்?

வானவனாய இந்திரன் வெள்ளிமால்வரைக் கயிலையை நோக்கி விரைந்து செல்கின்றான்; செருக்குடன் கண்டுபோற்றவே அவன் அப்படிச் செல்கின்றான். இதைக்கண்டார் சிவபெருமான் அவனது செருக்கினை அடக்கவேண்டுமென்று திருஉள்ளங் கொண்டு இந்திரனது முன் ஓர் வீரனாக வேடங் கொண்டு நிற்கின்றார். வீரனைக் கண்ட இந்திரன் தன்செலவை நிறுத்தி "நீ யார்?" என்று கேட்கிறான்.

வீரன் மௌனம் சாதித்து நிற்கிறான். இந்திரனுக்குக் கோபம் வந்து விடுகின்றது; தன்னிடமுள்ள வயிரப்படையை அவ்வீரன் மீது எறிகின்றான். அந்த வயிரப்படையானது அந்தக் கணமே துகளாய்ப்போய் விடுகின்றது. வீரனாய சிவபெருமான் கோபங்கொண்டவராய் உக்ரவடிவங்கொள்ளுகிறான். இந்திரன் தலைகுனிந்து வணங்கித்தன் குறையைப் பொறுத்தருளுமாறு

விண்ணப்பம் செய்கின்ருன். செய்யவனும் சிவபெருமான் விண்ணப்பம் கேட்டு நல்கும் பெருமை யுடையவனுயிற்றே!

தன் சினத்தை, அடக்கிக் கொண்டு விடுகின்ருன் சிவ பெருமான்! அந்தச் சினத்தீயானது கடலிலேபோய் விழுகின்றது. அதுவே சலந்தரன் ஆகிறது. வஞ்சகமே உருவாகிய சலந்த ரனைச் 'சலமுடைய சலந்தரன்' என்பார் மாணிக்கவாசகர். சலந் தரன் என்ற அசுரன் சம்காரம் விற்குடியில். அதனுல் அவ் வரலாற்றை இங்கு விரிக்காது விட்டு விடுகின்றேன்.

இப்படி இந்திரனுக்கு அருள்புரிந்த காரணம்பற்றி இத் தலத்து இறைவன் 'குற்றம் பொறுத்த நாதஈச்சுரர்' என்னும் நாமத்தால் அழைக்கப்படுகின்ருர். இத்தலத்திலே சீர்காழி பிரமபுரீசர்கோயிலில் உள்ளது போல் 'உமாமகேசுவரர்' 'சட்டை நாதர்' இருக்கின்றனர். காழியம்பதியிலேயுள்ள நினைப்பும்— ஆசையும் இப்படியொரு அமைப்பைப் பிற்காலத்தவர் ஏற்படுத் தியிருக்கலாம். அதனுல் இது 'மேலக்காழி' என்ற பெயரும் கொண்டிருக்கலாம்.

---

இராகம்: பூர்விகல்யாணி தாளம்: ஆதி

பல்லவி

அருள்நிதியே உந்தன் அருளை என்று பெறுவேன்
குருபரனே நீ ஆதரி என்றும் மறவேன் (அருள்)

அனுபல்லவி

கருமவினையால் என்னைக் கலங்கவைத்தல் கண்யமோ
தருமமோ நீதியோ தயைபுரிவ தாகுமோ (அருள்)

சரணங்கள்

1) பொருள்படைத்த பெருமை போகசுகமும் கண்டேன்
மருளடைந்து மனதில் மயக்கம்மிகவே கொண்டேன்
இருளடைந்த வாழ்வினில் இருட்டறிவை நீக்கியே
திருவுளமிரங்கியே திருந்திடச் செய்வாயே (அருள்)

2) அற்பஆனந்தம்கொண்டு அலைந்து திரிந்திடாமல்
சர்வேசனே உந்தன் சரணம் மறந்திடாமல்
நிர்மல சுகம்தேடி நின்னைத்தினம் துதிக்க
வர்மமும் வையாமல் கருணைக்கடைக்கண் வைக்க (அருள்)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணுர்பேட்டை, திருநெல்வேலி–3,

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 15, இதழ் 11-ன் தொடர்ச்சி]

## II

### THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

51. கானநாடுகலந்துதிரியிலெ
னீனமின்றியிருந்தவஞ்செய்யிலெ
னூனையுண்டலொழிந்துவானோக்கிலென்
ஞானனென்பவர்க்கன்றிநன்கில்லையே.

51. Why roam the jungle, wander cities through?
Why plague life with unstinting penance hard
Why eat no flesh, and gaze into the blue?
Release is theirs, and theirs alone, who cry
Unceasing to the Lord of wisdom high.

---

# குழந்தைச் செல்வம்

## அம்மானைப் பாடல்

**திருமதி ஜெயகுமாரி பாஸ்கரன் அவர்கள்**



"கைகும்மலரிற் பொலிகதிர் முத்தம்மனை நகைமுத் தொளி தோயக் கண்டவர் நிற்கப்பிறர் சிலர் செங்கைக் கமலச் சுடர் கதுவச் செம்மணியிற் செய்திழைத்தன எனவும் சிற்சிலர் கட்கடையின் செல்வியை வவ்விய பின் கருமணியிற் செய்தன கொல்லெனவும் தம்மனம் ஒப்ப உரைப்பன மற்றைச் சமயத் தமைவு பெறுர் தத்தமில்நின்று பிதற்றுவ பொருவத்தனிமுதல் யாமென்பார்க் கம்மனையாயவர் தம்மனை ஆனவள் ஆடுக அம்மனையே அழகு தழைந்த கல்யாண சவுந்திரி ஆடுக அம்மனையே"

இது ஒரு அம்மானைப்பாடல். அம்மாவுடன் பிறந்த அண்ணன், தம்பிகளைப் பற்றிய பாடல் இது என்று யாராவது நினைப்பீர்களா? இல்லை, இல்லை. இது பெண் குழந்தைகள் பந்தாடு வதைப் பற்றிய பாடல், 'அம்மானை' என்ருல் பந்து என்ற ஒரு பொருள். ஒன்று, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பந்துகளை வீசி எறிந்து, எறிந்து பிடிக்கின்ற ஆட்டம்; பெண்கள் கூடி ஆடுகின்ற ஆடல்.

இது பெண்கள் கூடி ஆடுவதனுலேயே 'அம்மானைப் பாடல்' என்று சொல்லப்படுகிறது. 'அம்மானை' என்ற சொல் எப்படி பந்து என்று பொருள் தரும்? என்ற கேள்வி சிலர் உள்ளங்களில் எழலாம். அல்லவா? பெண்களை 'அம்மானுய்' அம்மானுய் என்று விளித்து ஆடுவதனுலே அந்த பந்தாட்டமே 'அம்மானை' என்று பெயர் பெறுவதாயிற்று, ஆடும் பந்து கூட 'அம்மானை' என்று சொல்லப்பெறுகின்றது.

---

*மேலே கண்ட கட்டுரை திருச்சி வானொலி நிலையத்தார் அனுமதி யுடன் பிரசுரிக்கப்படுகிறது.*

'அம்மானே' என்றாலே 'தாய்', 'பெண்' என்றுதான் பொருள். 'அம்மனை' அல்லது 'அம்மானை' என்றாலும் அதே பொருள்தான். 'நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்! மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்' என்று ஆண்டாள் நாச்சியார் தமது திருப்பாவையில் பாடியிருப்பதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். 'அம்மனாய்'! என்று சொல்வது 'தோழி', பெண்ணே! என்று சொல்வதுபோல்தான்.

திருவாசகத்தில் மாணிக்க வாசகப் பெருமான் 'திருஅம்மானை' என்ற ஒரு பகுதியைப் பாடியிருப்பது உங்கள் நினைவுக்கு வரலாம். "ஊனாய், உயிராய், உணர்வாய் என் உட்கலந்து, தேனாய், அமுதமாய், தீங்கரும்பின் கட்டியுமாய்" எனத்துவங்கி 'அம்மானாய்'! என முடியும் அப்பகுதியில் வருகின்ற இப்பாடலிலே, இறுதியில் வரும், 'அம்மானாய்' என்பதற்குப் பெண்ணே! என்று தான் அர்த்தம்.

இப்படியாக, பெண்களைக் குறிக்கும் 'அம்மானாய்' என்ற சொல், பெண் குழந்தைகளின் பந்தாடல் பற்றிப் பிள்ளைத் தமிழில் பந்தாடும் பாடலுக்கும் பிற்காலத்தில் வைக்கப் பெறலாயிற்று.

'பிள்ளைத்தமிழ்' எனும் பாடல்நூல் பிள்ளைப் பருவத்தைப் பற்றிய ஆடல்களைக் குறித்துப் பாடுவது. பத்துப்பருவங்களாக வகுத்துப் பாடுவார்கள். பிள்ளைத் தமிழ்பாடும் புலவர்கள் சாதாரண குழந்தைகளின் பிள்ளைப்பருவத்தைப் பற்றி பாடுவதில்லை. தெய்வங்களைப் பற்றியே பிள்ளைத் தமிழ் பாடியிருக்கிறார்கள்.

பெண்பால் தெய்வங்களாகிய குளத்தூர் அமுதாம்பிகை, மதுரை மீனாட்சியம்மை, அளகாபுரி உமையம்பிகை, திருவுத்தர கோசமங்கை மங்களேசுவரி, திருபுக்கொளியூர் அவிநாசி பெருங்கருணையம்மை முதலிய அருட்சக்திகளைப்பற்றிப் பிள்ளைத் தமிழ் நூல்கள் பாடப் பெற்றிருக்கின்றன.

இத்தெய்வங்களின் குழந்தைப் பருவத்தில் அம்மானைப் பந்தாடியதைப் பற்றிப்புலவர்கள் பாடுகின்றார்களே, அவர்கள் இத்தெய்வங்கள் குழந்தையாயிருந்தபோது பார்த்திருக்கிறார்

களா என்ற கேள்வியை யாரும் கேட்டுவிடாதீர்கள். புராணங்களிலே, தத்துவ நூல்களிலே தெய்வத்தின் பேராற்றலைப் பெண் வடிவமாகக் கூறியிருப்பதைப் பற்றிய செய்திகளை எல்லாம் மனதிலே வைத்துக் கொண்டு, அவற்றைக் குழந்தைச் செயல்களில் செறித்துப் பாடுவது தான் பிள்ளைத் தமிழ் பாடுகின்ற மரபாக இருந்திருக்கின்றது.

முதலில் நீங்கள் கேட்டீர்களே, ஒரு அம்மானைப் பாடல், அது மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழில் அம்மானைப் பருவத்தில் வருகின்ற ஒரு பாடலாகும். மற்றப் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களில் அம்மானைப் பருவத்தில் வருகின்ற கருத்துகளை, ஒருவாறு அறிந்து கொள்வதற்கு மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழின் அம்மானைப் பாடல்களின் கருத்தை அறிந்து கொள்வது இவ் வேளைக்குப் போதுமானதாகும்.

மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ்பாடிய குமரகுருபரர் மிகச் சிறந்த புலமையும், கற்பனைத் திறமும் பூண்டவர். அவர் பாடல்களிலே அவற்றை நிரம்பக் காணலாம். மீனுட்சியம்மை, தமது அருமைத்திருக்கரங்களினுல் பந்துகளை எடுத்து வானவெளியில் வீசுகிருர். பந்துகள் விரைந்து மேலே ஓடி, விரைந்து கீழே வருகின்றன. இதனை அவர் கற்பனைக் கண்களால் கண்டு கூறுகின்ற நயத்தை அறிந்து மகிழ்வோம்.

ஆண் யானையினுடைய பெரிய வயிற்றை நிரப்புவதற்கு, சோற்றை உருண்டை உருண்டையாகப் பந்துபோலத் திரட்டி, விரைந்து விரைந்து எறிவது போல் இருந்ததாம். பந்துகள் மேலே செல்வது திருப்பாற்கடல் கடைந்த போது, அதில் வந்த அமுதத்தைக் கலசம் கலசமாக முகந்து அங்குச் சூழ்ந்திருந்த தேவர்களுக்கு வீசி வழங்குவது போலவும் இருந்ததாம். முத்தினுலேயே செய்யப்பட்ட உருண்டைகள் வரிசை வரிசையாக மேற் சென்று விழுவது போலக் காட்சியளித்ததாம்.

அம்மை பெருமாட்டியின் தாமரை போன்ற கரங்களில் இருந்து வெள்ளை அன்னங்கள் ஒவ்வொன்ருகப் பறந்து மேலே ஓடுவது போலவும் இருந்ததாம் அம்மை மீனுட்சி பந்தாடும்காட்சி, கண் கொள்ளாக் கவின் காட்சி!

மற்றுமொரு பாடல் சுவையுங்கள்! பிள்ளைத்தமிழை அதிலும் அம்மானையைக் கேட்பது நம்மைச் சலிப்படையவா செய்கிறது? புலவருடைய கவிநயம் ஒவ்வொரு பாடலிலும் அற்புதமாகக் காட்சி யளிக்கிறது.

“உயிராயிருக்கின்ற சேடியரின் மலர்மீதுதித்தவள்எதிர்த்து நின்றேடொட்டி யெட்டிப்பிடித்திட்ட வம்மனை தேடி ஓடியாடித் திரிய நீ பெயராதிருந்து விளையாடுவது கண்டு எந்தை பிறை முடி துளக்க முடிமேற் பெருகு சுரகங்கை நுரை பொங்கலம்மானையப் பெண் கொடியும் ஆடல்மான வெயரா மனம் புழுங்கிடு அமரர் தச்சனும் வியப்பச் செயுந்தவளமா மேடையும் தண்தரள மாடமும் தெண்ணிலா வீசத் திசைக்களிறெலாம் அயிராவதத்தினை நிகர்க்கு மதுரைத் தலைவி அம்மானை ஆடியருளே ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்த பெண் அம்மானை ஆடியருளே”

மீனாட்சிக்குப்பல தோழிகள் உண்டு. அரசி அல்லவா? அவர்களில் தாமரை மலரில் தோன்றுபவள் திருமகள் – இலக்குமி அழகுடையவள்; நமக்குச் செல்வம் அளிப்பவள். அவள் மீனாட்சியின் உயிர் போன்று விளங்குபவள். அவள் மீனாம்பிகைக்கு எதிராக நின்று சபதம் செய்து அம்மை எட்டிப் பிடித்த அம்மானையைக் காணாமல் தேடி ஓடி ஆடித் திரிகின்றாள். பெண்கள் இயற்கையிலேயே குறும்புடன் கூடிய நகைச்சுவை மிக்கவர்கள். அத்தகைய பெண்களின் பிரதிநிதியாக உள்ள தெய்வங்களுக்குள் விளையாட்டு என்றால் அது அற்புதம்தானே!

இலக்குமி அவ்வாறு தேடித்திரிய, மீனாட்சியம்மை பெயராது இருந்து விளையாடுவது கண்டு எம்பிரானாகிய சிவபெருமான், பிறை அணிந்த சடைமுடியை அசைக்கின்றாராம். தன் மனைவியினுடைய வேடிக்கையான விளையாட்டைக் கண்டு அவர் தலையை அசைத்து மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றார். அப்பொழுது சடைமுடியில் தங்கியுள்ள ஆகாய கங்கையின் நுரை மேல் எழுதல் அப்பெண்ணும் அம்மானை ஆடுவதை ஒத்திருக்கிறதாம் பார்ப்பதற்கு.

தம் கற்பனைக் கண்களால் பார்த்துப் புலவர் பாடும் அழகே அழகு. தம் திறத்தினால் மற்றவரையும் ஆடச்செய்யும் அன்னையின் செல்வத்தினைக் குறிக்கின்றார் பாருங்கள்–கட்டிடம் கட்டு

